விருத்தியென்பதைச் சுத்தசத்துவாதி மூன்றிடத்துங் கூட்டுக. எனவே, சுத்தசத்துவவடிவ மாயாவிருத்தியெனவும், மலின சத்துவவடிவ அவித்தியாவிருத்தியெனவும், தமப்பிரதானவடிவு விருத்தியெனவுங் கொள்க. மாயையின் சத்துவத்தில் மூன்றும் - ரஜசில்மூன்றும் - தமசில்மூன்று மாகவொன்பதாய்விரிந்தது விருத்தியென்க. (கூ)

(கவி - கூச. அ - கை.)

மாயையின் சத்துவாதி குணங்களிற் சகசிவபரங்களி னுற்பத்தி கூறுவான்வேண்டிச் சுத்தசத்துவ மாயையி லீசன்தோன்றுமியல் பினையதென வுணர்த்துகின்றது.

மாயைவரு சுழுத்திலயங் களினத்தி யாசயிக்க மாயிற் றுண்மை,யாய
பிர மத்தினை வொடுபடைப்பி னிதுபேத வவத்தை யெய்து, மேய
வதிற் பிரமசைத னியம்விம்பித் திட்டதுவே விளங்கு ஞானங், தூய
சை தன்னியமே பதியிறையென் றிடநிற்குந் துணிவி தாமே.

[பொழிப்புரை.]

மாயைவரு சுழுத்திலயங் களினத்தி யாசயிக்க மாயிற்று" எ - து. மாயையானது ; இடைவிடாது மாறிமாறிவருகின்ற சுழுத்தியவத்தையிலும், சாவசங்காரகாலங்களிலு மயிககமானதுபோ லத்தியாசமாகக் காண்படுதெங்ஙனமோ அதுபோல. "உண்மையாய பிரமத்தி னனவொடு படைப்பி னிதுபேத வவத்தையெய்தும்" எ - து. உண்மையாநின்றுள்ள சைதன்யத்திற் சாக்ராவத்தையிலும் படைப்புகாலத்திலு மிந்தமாயையானது - இங்ஙனமாய பேதவவத்தைகளை யடைந்ததாகக் காணும். "மேயவதிற் பிரம சைதனியம் விம்பித்திட்டதுவே விளங்கு ஞானந் தூய சைதன்னியமே பதியிறையென் றிடநிற்குந் துணிவிதாமே" எ - து. இந்நிலையதாக வாய்த்த - அந்தமாயையிற் பிரமசைதன்யமானது பிரதிவிம்பிக்க - அங்ஙனம் பிரதிபிம்பித்த சாயையே ஞானவடிவாகவிளங்கும். பரிசுத்தசைதன்யமே பதியெனவும் - இறையெனவு மெவருங் கூறும்படியாக நிற்கும், இதுவே துணிவெனப்படுவதாம். எ - று. ஆகாயவியாபகத்தி லணுத்துவ வேகதேசவிடத்திற் காற்றெழுந் தெங்கணும் வியாபித்து மோதி யடங்குவதுபோல்வதின், பிரமத்தில் மாயை பேதவவத்தை யெய்தி யமிக்காயிற்றென்றார். சுழுத்தி-லயம். நனவு - படைப்பு. இவை நேர்நிரனிறை. சுழுத்தி - கனவு - சிவசைதன்யத்திலும், லயம் - படைப்பு - ஈசசைதன்யத்திலு மெனச்சேர்க்க.

பேதமென்பது - பிரமவியாபகத்தில் மாயை இருந்தும்வேறுபடுதல். இனி ... பிரதிபலிக்கு ... விருத்தி ... னிவ்வெனவும், இங்ஙனமுண்டாகி

ன்ற யாவைக்குங் காத்தாவா யிருத்தலின் பதியெனவும், அவை யனைத்தையும் பிரேரகப்படுத்தலி னிறையெனவுங் கொள்க

மாயையான துண்மையான பிரமத்துடனே யத்தியா சயிக்கியமாயடங்கிக் கிஞ்சித்து வெளிப்படும்போது - அதற்கே சுத்தசத்துவ மாயாவிருத்தியெனவும், இந்நிருமலத் துதித்த பிரமப் பிரதிபலனசசாயை நிருமலமாய் விளங்கலினலே சர்வஞ்ஞத்துவாதி குணவிசிஷ்டனை வீசனெனவுமாம் (கக)

(கவி - கூரு அ - கை. வேறு.)

மேறகூறிய மலின சததுவாவித்தையிற சீவர்கடோன்று மியல் பினையுந் தென வுணாதது கின்றது

அப்பரற குபாதி யாகி யமோககா ரணியா மாயை
பொய்ப்புறு மவித்தை யெண்ணிற் போத்திரு பசுவென் றோது
மொப்பருஞ் சீவர்க் கெலலா முபாதியாய் மோகஞ் செய்யு
மெய்ப்புறு பகுதி பாச மெனச்சம குணமா நின்று.

[பொழிப்புரை.]

அப்பரற குபாதியாகி யமோக காரணியா மாயை" எ - து மாயையென்பது, முற்கூறிய பரனுககுபாதிவடிவாகின்று மோகரகித காரணியாகிறகும். "பொயப்புறு மவித்தை யெணணிற போததிரு பசுவென்றோது மொபபருஞ சீவர்கெல்லா முபாதியாய் மோகஞ்செய்யும்" எ - து பொய்யெனறகியைந்த வவித்தையென்ப தெணணிறநத போததிருவெனவும், பசுவெனவுஞ சொலலத்தக்க வொப்பிலலாத சீவாகளுககெலலா முபாதியாகநின்று மோகத்தைச்செய்யாகிறகும் "எய்ப்புறு பகுதிபாசமெனச சமகுணமாகின்று" எ - து இலெளகக த்தக்க மூலபபிரகிருதியானது போககியாத்மகததுவததினுற் பாசமெனககூறப்பட்டுக் குணததிரயசமானுவத்தையாகின்று எ - று காரணமென்றபாலது - காரணியென்றாயது, சுத்தமாயாசத்தியை நோககியென்க போத்திருவெனல் - அநுபவிப்பவனே. அவிதததையை யுபாதியெனல - மயககுந்தகைமை பற்றியும், உபாதியமோககாரணியெனல் - மயககம் விளைவியாமை பறறியுமென்க. இவ்விரண்டேதுக்களால் சர்வக்ஞத்துவமுதலிய குணஙகளும் - கிஞ்சிக்ஞத்துவமுதலிய குணஙகளும் வந்தமைகாண்க அதோமுகத்திறகும - ஊர்த்தமுகத்திற்கு மியைந்துநிற்பது வேறின்மையின், சீவர்களுக் கொப்பருமென் றடைகொடுத்தார். குணத்திரியத்திற்குப் பகுதி சமமாநிற்றலின், சமகுணமா நின்றென்றார். பகுதிக்கு - எய்ப்புறுவென் றடைகொடுத்தது - அளவிறந்தபிறவிகளைத் தந்திளைப்பையுண்டாக்குந் தகைமைபற்றியென்க. எனையபாசங்கள் - பகுதியே ல்வதன் றுறைமையின், பகுதிபாசமெனப்பட்டது. வித்தைக் கவித்தை வேறன்மையின் பொய்ப்புறுமவித்தையென்றார்.

(கவி - ௬௬. அ - கை.)

மூற்கூறிய தமப்பிரதான ரூபமான பிரகிருதியிற் காலதத்துவந் தோன் றுமியல் பினையதென வுணர்த்துகின்றது.

அவித்தையின் விம்பித் துள்ள வாருயிர் நுகர்ச்சிக காகத்
துவக்குறு காரி யஙக டோற்றிட வெதிர் குறித்த
வுவப்புறு மீசனேக்க மாத்திரத துற்ற லர்ந்து
பவப்படு காலமாகி யதுகொடு பரிணு மித்து.

[பொழிபபுரை.]

அவித்தையில் விம்பிததுள்ள வாருயிர் நுகாச்சிக காகத துவககுறுகாரி யங்க டோற்றிட”எ - து. முன்னாகூறிய வவிததையினிடததிற் பிரதிபிம்பி த்த நிறைந்தவுயிர்களின் போகானுபவ நிமித்த முடலுக்கியைந்த காரியஙகளெ வையோ, அவையனைத்து முணடாகுமாறு “எதிாகுறிதத வுவப்புறு மீசனேக் க மாத்திரத்துற்றலாந்து”எ - து. தனக்கெதிராகச் சங்கறபித்த - ஆனநதவடிவ மாண வீசனேக்கின மாத்திரத்தி லுடனே யெஙகணும் பரவி.“பவப்படு காலமா கி யதுகொடு பரிணுமித்து”எ - து பவத்திறகியைநத காலதத்துவமாகி யதுகார ணமாக மாறுபட்டு எ - று துவக்கு-காரணவாகுபெயர். நுகாச்சிககியைந்தகாரி யம்-சத்தபரிசாதிகளை. இவையனைத்துஞ் சடமாதலி னெதிரொன்றா. உவப்புறு மீசனென்றது - அன்பருக் கினிமைபறறியென்க பால்தயிராதலைப் பரிணமித் தலென்றூர். காலமாயதும் - பரிணமிதததும் பகுதியென்க பிரதிபிம்பித்தலைவி ம்பித்தலெனல் - மரூஉ

வித்தையாப் பிரதி விம்பரான வீசுரன் தனது கடாக்ஷததினு லவித்தை யாப் பிரதி விம்பரான சீவாகள மயககம் நீஙகத் தனுவாதிகளாக கொடுக்குநிமி த்தங காலதத்துவ முணடாயிற றென்பதுகருத்து (௬௬)

(கவி - ௬எ. அ - கை.)

மகதத்துவத்தி னுற்பத்தியுங் குணமு மினையவென வுணாத்துகின்றது

இருமக தத்து வந்தா னெனவிற்கு மதுதா னிாபெய்
தரும்வினை முனையா மன்முன் போவிரா தாதல் போலக்
[illegible]வெவும் பகுதி யோடர்க் காரமு மாகா மற்பொய்
[illegible] விருவி [illegible] வுருவே வவத்தை யாகும்.

[பொழிப்புரை.]

இருமக தத்துவந்தா னெனநிற்கு மதுதா னீர்பெய் தரும்விதை முளையா மன் முன்போ லிராதாதல்போல" எ - து. பெரிதாகிய மகதத்துவ மெனக்கூறப்பட்டு நிற்கு மந்நிலையது நீர்விட்ட விதையானது முளையாமலும், முன்போலிராமலு மெங்ஙனமாநிறருமோ வதுபோல, "கருவெனும் பகுதியோ டாங்காரமு மாகாமற் பொய்யுரமுறு நிருவிகறப வுருநடுவவத்தையாகும்" எ - து. கருப்பம்போல்வதாகிய மூலபபிரகிருதியு மாகாமல அகங்காரததுவமு மாகாமல் கற்பித ஞான சம்பநத முளள நிர்விகறப வடிவமான மத்தியகத வவத்தை யெனப் படுவதாம். எ - று தனத திஷ்டான நிலை மறந்ததாற் பொய்யுர மெனப்பட்டது. உதாரணம்; என்னை நானறியே னென்னல் கருப்பம் போல வதின், பகுதியைக கருவென்ருர் திரிகுணமாக விரியாமையி னிருவிகறபமெனப் பட்டது.

பிரகிருதிகரு விதையும - மகததது வத்துக கூறினவிதையும் - அகங்காரததிறகு - அஙகுரவிதையு முவமிதத தென்க. நடுவென்றமையின முதற்பிரகிருதியு மீறறிலகஙகாரமுங கொளக விதை நீரினுபபி னஙகுராதி விருக்ஷமுணடாதற கேதுவாதலபோலப பிரகிருதி யுன்முகததான் மகததது வமாத லாங்காராதி சகமுணடாதற கேதுவென்க. (கஎ)

(கவி - சூஅ். அ - கை)

மேறகூறிய வகஙகாரததது வததி லுதிதத குணததிரியநாம மினையவென வுணாத்துகின்றது

கொன்மக தத்து வததிற் குணபேத முருபபொய ஞான
மன்சவி கற்பமாக வருமுத லததி யாச
மென்முத லாங்கா ரந்தோன் றிடுகுணஞ் சததது வந்தான்
பின்வரு மிராச தஞ்சொற் பெருந்தமோ குணமென் றுகும்.

[பொழிப்புரை.]

கொன்மக தத்துவத்திற் குணபேத முருப்பொய் ஞான மன்சவி கற்பமாக" எ-து. பெரும்பாலு மகதத்துவத்திற் குணபேதமுற்று மிகவு மித்தையாஞானத்தினல் விகறபவடிவமாக. "வருமுத லத்தியாச மென்முத லாங்காரந் தோன்றிடுகுணம்" எ - து. வருகின்ற முதலத்தியாச மெனக்கூறு முதலகங்காரத்தில் தோன்றுகின்ற குணங்கள். "சத்துவந்தான் பின்வரு மிராசதஞ் சொற்பெருந் தமோகுணமென் றகும்" எ - து. சாத்துவிதம் - பின்தொடர்ந்து வரு மிராசதம் - பெரிதாகச்சொல்லப்பட்ட தாமதமெனப் பெயர்பெறு

ம், ஆ, - று. கொண் - மனவென்பன - இடைச்சொற்கள். உருவென்பது செய்யவென்னும் வினையெச்சம் சவ்விகற்பமாதலின், பொய்ஞானமென்றார். ஒன்று மற்றொன்றாகத்தோற்றுவ தத்தியாசம்.

விருட்சத்துக்கு அங்குரமுதலாவதுபோலச் சகத்தோற்றத்திற் ககங்கார முதலாதலி னிவ்வகங்காரத்தை முதலென்றார் (கூஅ)

(கவி - கூக. அ - கை.)

முன்னர் கூறிய திரிவிதகுணங்களி னுருவங்களும் - இவைகாரணமாக வந்த வவற்றினிளைப்பெயர்களு மினையவென வுணர்த்துகின்றது

உரைப்பருஞ் சத்து வாதி யுருவங்கள் பிரகா சம்பின்
புரைப்பிர விருத்தி மோக மென்குவர் புகல்கு ணங்க
ளிளைப்பெயர் தான்வை காரி திகழுந்தை சதம்பூ தாதி
விரிப்பருங் குணங்கண் மூன்றுந் தருவமேல் விளம்ப லுற்றாம்.

[பொழிப்புரை.]

உரைப்பருஞ் சத்துவாதி யுருவங்கள் பிரகாசம் பின் புரைப்பிர விருத்தி மோக மென்குவர்" எ - து சொல்லற்கரிய சாத்துவிதமுதலிய குணங்களின்வடிவங்கள்; பிரகாசமும் - பின்னர்கூறப்படும் பிரவிருத்தியும் - மோகமுமெனச் சத்துக்கள் கூறுகிறபர் "புகல்குணங்க ளிளைப்பெயர்தான் வைகாரி திகழுந் தைசதம் பூதாதி" எ - து இங்ஙனங்கூறிய குணத்திரியங்களின் முறைப்பெயர்கள் - வைகாரி - விளங்காநின்ற தைசதம - பூதாதியெனப்படுவனவாம் "விரிப்பருங் குணங்கள் மூன்றுந் தருவமேல் விளம்பலுற்றாம்" எ - து விரிவாகச் சொல்லற்கரிய விம்மூன்று குணங்களுந் தருவனவற்றை யினிச்சொல்லுதும் எ - று சத்துவாதி-தருவ - வினையாலணையும் பெயர்.

குணங்க ளிளைப்பெயரொன்றது, சத்துவப் பிரகாசத்தில் வைகாரியும்-ரஜசின் பிரவிருத்தியிற - றைசதமும் - தமசின்மோகத்திற பூதாதியு மெனக்கொள்க.

வித்தையின்க ணுதித்த வங்குரமே மூன்றிதழானதுபோல,மகத்தத்துவத்தினுதித்த வகங்காரமே முக்குணமாயிற்றென்க (கூக)

(கவி - எ௦. அ - கை.)

முன்னர்கூறிய தனித்தனி குணங்களினின் றுதிக்குந் தத்துவங்களினை யுணர்த்துகின்றது.

சாத்துவ குணத்திற் றோன்றுந் தயங்குமுட் கரண நான்கும்
புத்தியிந் திரியங்க ளைந்தும் போந்துதித் திடுமி ராச
தத்தில்வாக் காதி யைந்துந் தரும்பிரா ணாதி யைந்து
மத்தமோ குணத்திற் றோன்று மகல்விசும் பாதி பூதம்.

[பொழிப்புரை.]

"சாத்துவ குணத்திற் றோன்றுந் தயங்குமுட் கரண நான்கும் புத்தியிந்திரியங்களைந்தும்" எ - து சாத்துவிகதகுணத்தில் விடாதுழலுகின்ற வந்தக்கரணங்க ணான்கும்-ஞானேந்திரியங்களைந்து முதிக்கும். "போந்துதித்திடு மிராசதத்தில் வாக்காதி யைந்துந் தருபிரா ணாதியைந்தும்" எ - து இராசதகுணத்தில் வாக்கு முதலிய கன்மேந்திரியங்களைந்தும் - உடலுக்கியைந்த பிராணாதிவாயுக்களைந்தும வந்துதிக்கும். "அத்தமோகுணத்திற் றோன்று மகல்விசும் பாதிபூதம்" எ - து அந்தத்தாமதகுணத்தி லெங்கணும் வியாபித்த வாகாயமுதலிய பஞ்ச பூதங்களுதிக்கும். எ - று. புறம்பின்மையி னகல்விசும்பென்றா பஞ்சீகரித் தென்றதனுல், விசும்பாதிபூதமெனலை யபஞ்சீகிரதமாக்குக. அன்றேல் - மூன் றும்

கரண நான்கென்பன ; மனம் புத்தி-சித்தம்-ஆங்காரமும், புத்தியிந்திரியங்களைந் தென்பன , செவி-மெய்-கண-நா-மூக்கும், வாக்காதி யைந்தென்பன ; வாக்கு - பாதம் - பாணி - பாயுரு-உபஸ்தமும், பிராணாதி யைந்தென்பன, பிராணன் - அபானன் - உதானன் - வியானன்-சமானனும், இப்பத்தொன்பதுஞ் சூக்குமதேகமும் - விசும்பாதி பூதமென்பன; விண - காற்று-அக்கினி-அப்பு-மண் - இவ்வைந்துந் தூலபூதமுமா மெனககொள்க (௪௦)

(கவி - ௪க. அ - கை.)

அங்ஙனம் பஞ்சீகரித்த பூதத்தினின் றுலகமாதலும் - அந்தக்கரணங்கள் சேட்டித்தலும் - அவற்றிற் கதிதேவதைகளாகிற்றலு மினையவென வுணர்த்துகின்றது.

அப்பெரும் பூதம் பஞ்சீ கரித்துல காகி நிற்குஞ்
செப்பிய கரண நான்கின் செயல்கடா னினைத்த லாதப்
பொய்ப்பொரு ளணிதன் மானம் புரிதல்சிந் தித்த றிங்க
டிப்பிய நான்மு கன்கேத் திரிபுராந் தகன்றே வன்றே.

[பொழிப்புரை.]

"அப்பெரும் பூதம் பஞ்சீகரித் துலகாகி நிற்கும்" எ - து முன்னைக்கூறிய வபஞ்சீகிரத பஞ்சபூதர் தூலமாகப் பஞ்சீகரித் துலகாகிநிற்கும். "செப்பிய

காரணங்களின் செயல்கட்டா நினைத்தலந்தப் பொய்ப்பொரு ளெனிதன் மானம் புரிதல்சிந் தித்தல்" எ - து. முன்சொல்லிய மனமுதலிய நான்குகரணங்களி ன் செயல்களாவன; அந்தப்பூதாதி மித்தையாப்பொருளை நினைத்தலும் - நிச் சயித்தலும் - அபிமானித்தலும் சிந்தித்தலுமாம். "திங்க டிப்பிய நான்முகன் கேத்திரி புராந்தகன் தேவு" எ - து. இவற்றின் தேவதைகளாவன; சந்திர னும் - சிறந்தபிரமனும் - விட்டுணுவும் - உருத்திரனுமாம். எ - று. அன்று-ஏ- அசைகள். தனக்கெனச் சொரூபமொன்றின்மையின், பூதாதிகளைப் பொய்ப் பொருளென்றார்.

கரணநான்கின் செயல்கள், தேவு, எனவே, மனதிற்குச் சங்கற்பித்தலும்- சந்திரனும், புத்திக்குத் துணிதலும்-பிரமனும், சித்ததிற்குச சிந்தித்தலும்-வி ஷ்ணுவும், அகங்காரத்திற்கு அபிமானமு - முருத்திரனுமாம்.

பஞ்சீகரித்தலென்பது; தன்மாத்திரையின் றமோகுணபூதங்களை யொ ன்றிரண்டாகப் பகுத் தவைதின் முற்பாதியைந்தை நிறுத்திப் பிறபாதியைந்தி லொவ்வொன்றை நந்நான்காக்கி யிவற்றை முற்பாதியிற் றன்னமிசம்விட்டு ம ற்றவைக் கிவ்விருபதையுங் கொடுக்க ஸ்வயாமிசம் பாதியு மேனையவமிசம்பா தியுஞ் சேர்ந் தொன்றுதலே. (எக)

(கவி - எ௨. அ - கை.)

இந்தக் கரணங்கட்குத் தானமும் - ஞானேந்திரியங்கட்குப் புடைபெய ர்ச்சியும் - அதிதேவதைகளும் - தானமு மினையவென வுணர்த்துகின்றது.

இக்கா ணங்க டான மிதயஞா னேந்தி யங்கட்
குய்க்குறு தொழிலாங் கேட்ட லுறல்காண்ட லுண்டன் மோத்த
றிக்குமா ருதமே நன்மித் திரனுயர் வருண னோடு
தக்கசு வினியாந் தெய்வந் தானங்கா தாதி யாமே.

[பொழிப்புரை.]

இக்கா ணங்கடான மிதயஞா னேந்தியங்கட் குய்க்குறு தொழிலாங்கே ட்ட லுறல்காண்ட லுண்டன் மோத்தல்" எ - து. இந்தமனமுதலிய வகக்கர ணங்கட்குத் தான மிருதயமாம். ஞானேந்திரியங்கட் கியைந்த தொழிலாவன; கேட்டல் - பரிசித்தல் - பார்த்தல் - புசித்தல்-முகர்தலாம் "திக்கு மாருதமே நன்மித்திரனுயர் வருணனோடு தக்கசுவினியாந் தெய்வந் தானங்காதாதியாம்" எ - து. அதிதேவதைகளாவன; திக்கும் - காற்றும் - நல்லசூரியனும் - சிறந்த வருணனும் - தகுந்தவசுவினியுமாம். தானங்களாவன; காது முதலியனவாம். [illegible] ஏ - அசை. [illegible] தக்க-அசுவினி

யென்றபாலது - தக்கசுவினியென்றாயது-விகாரம். ஆதியென்றதனால், மெய் வாய் கண் மூக்கைக் கொள்க.

கிரணங்களென்னும் பன்மைகூறித் தானபிதயமென நடுநிலையைக்கூறி னமையிற் புத்திக் கஃது மனதிற்குக் கண்டமுஞ் சித்தத்திற்கு நாபியு மகங்கா ரத்திற்குச் சர்வாங்கமுமாமெனவும், காதாதியென்றது ; மெய் - கண்- நா-மூக் கெனவும், ஞானேந்திரியங்கட்குத் - தொழில - தெய்வம். தானமெனவே, நிர லே சுரோத்திரத்திற்குக் கேட்டலும் - திசும் - காதும், தொக்குவிற்கு - உற லும் - மாருதமும் - மெயயும், சட்சுவுககுக் காணடலும் - மிதிரனும் - நேத்தி ரமும், சிங்குவைககு - உணடலும் - வருணனும் - நாவும், ஆககிராணத்திற்கு - மோத்தலும் - அசுவினியும் - மூககுமா மெனககொள்க (எ௨)

(கவி - எக. அ - கை - வேறு.)

மேற்கூறிய ஞானேந்திரியங்களி னுட்டொழிலும் - கன்மேந்திரியங்க ளின் புறததொழிலு மினையவென வுணாத்துகின்றது.

புத்தியிந்தி ரியஙகடா மூணருவதாம் விடயம்
புறமெனவே யுள்ளுமுணாங் திடுஞ்செவிகள் புதைப்பி
னுயததபிரா ணதியொலி கேட்கையன்ன திகளை
யுண்ணுமபோ தழல்குளிர்ச்சி யறிதல்விழி மூடின்
மெத்துமக விருளறித லுற்காரா திகளின்
விளஙகுசுவை கந்தமறிந் திடன்முறையே யாகும்
வைத்தகரு மேந்திரியத் தொழிலுாைத்த னடத்தல்
வழஙகல்விட லானந்தித் திடுதலென வறியே.

[பொழிப்புரை.]

புத்தியிந்தி ரியஙகடா மூணருவதாம் விடயம்புறமெனவே யுள்ளுமுணர் ந்திடும்" எ-து.அறியுந்தகையினவாகிய ஞானேந்திரியங்களைந்து மெங்ஙனம் பு றம்பிலுள்ள விடயஙகளை யறியுமோ வதுபோல - அகத்திலுமறியும், எங்ஙன மெனின். "செவிகள் புதைபபி னுய்த்தபிரா ணதியொலி கேட்கை யன்னதி களை யுண்ணும்போ தழல்குளிர்ச்சி யறிதல் விழிமூடின் மெத்துமக விருளறித லுற்காரா திகளின் விளங்குசுவை கந்தமறிந் திடன்முறையே யாகும்" எ- து காதுகளைமூடியவிடத் தியல்பாகவே யுசுவாச நிசுவாசஙகளைச் செலுத்தும்பிரா ணன் முதலிய பஞ்சவாயுக்களின் சத்தங்களைக்கேட்டலும் - அன்னபானாதிக ளை யுண்ணுமிடத் தட்டணத்தன்மை யறிதலும் - கண்களைமூடியவிடத்து நட் [illegible] யறிதலும் - ஏப்பமுதலியவற்றிற் செனிக்கும் [illegible]

[பொழிப்புரை.]

அங்கிமக பதியிரவி மிருத்தியு பிரசேச ஞாதிதெய்வம்" எ - து. அக்கினியும்-தேவேந்திரனும் - சூரியனும் - யமனும் - பிரசாபதியுங்-கன்மேந்திரியங்கட் கதிதேவதைகளாம். "வாய்முதலாங் கோளகங்க டானம்" எ-து. வாக்குமுதலிய கோளகங்களே யவ்விந்திரியங்கட் கிடமாம் "இங்கிவைக ளுட்கரண மிருவகையிந் திரிய மென்னவரு பதினன்கு மத்தியான் மிகமாம்" எ-து. இங்கேகூறிய விவைகளுக்குள - அந்தக்கரணநான்கும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்துமென வழங்கிவரும் பதினன்கு மாத்தியாத்மீகமாம். "தங்குமிவற் றுறுவிடய மாதிபௌ திகமாம" எ - து இங்ஙனந் தங்கிய விவைகளுக்குரிய விடயங்க ளாதிபௌதிகமாம் "தகும்திதே வதையாதி தெய்வீகமாம்" எ - து தக்கசந்திரன் முதலிய பதினன்கு தேவதைகளே யாதிதெய்வீகமாம். "இப்புங்கவரோ யிந்திரியம் விராட்புருடற்கு" எ - து இத்தேவர்களே விராட்புருடனுக கிந்திரியங்களாம். "அதுமெய பொன்கருப்பற்கு" எ - து இரணியகருப்பனுக் கவவிந்திரியங்களே சூக்குமதேகமாம். "அதுமறைப்பா மந்தரியாமிக்கு" எ - து அந்தத்தேகமே யந்தரியாமிக்குத்தமோரூபமான வாவரணமாம். எ - று. ஏ - அசை கோளகம்-இடம் உறுவிடயம் - சம்சையாதி பதினன்கை

முற்கூறிய கன்மேந்திரியங் கட்குத் தெய்வமும் - தானமுமென்றது; நிரலே, வாக்கிற்கு - அங்கியும் - வாயும், பாதத்திற்கு-மகபதியுங்-காலும், பாணிக்கிரவியுங்-கையும, பாயுருவிற்கு- மிருத்தியுவுங்-குதமும், உபஸ்தத்திற்குப-பிரசாபதியுங்-குய்யமுமாம்.உரையிற்கோடலென்னு முத்தியால், விடயம் பதினன்காவன, சம்சய-நிச்சய-சானுசல்ய-அபிமான,சத்த-பரிச ரூப-ரச-கெந்த,வசன-கமன-தான-விசர்க்க-வானந்தங்களாம் சம்சயாதி நான்கு மொருபொருளிடத்தில் வைத்து,விடயம் பதினொன் றெனக் கூறுவாரு முளா அக்கரணம்,பதினன்கிற்குந் தனித் தனியே விடயங்க ளிருத்தலி னங்ஙனங் கூறுதல மரபன்றென்க.

(பதசாரம)

விடயங்களை நுகாதற் கிந்திரியங்களை யியக்குஞ் சந்திராதியருக்குத் தேவாம்சமிருத்தலி னதிதேவதையெனவும்—இவைகள் சகமாகிய தூலவிடயங்களை யறிதற்கிடமாயிருத்தலின், விராட்புருடனுக் கிந்திரியங்களெனவும்—அவ்விந்திரியங்க ளவ்விடயங்கட்குக் காரணமான சூக்குமமாயிருத்தலின்,பொன்கர்ப்பர்க் கதுமெய்யெனவும்—இவைக ளொன்றுந் தோன்றுமற காரணமான தமசிலடங்கியிருத்தலின், மறைப்பா மந்தரியாமிக்கெனவுங் கூறினர்,ஈனவேயீசனுக்குந் தீவாதி மூன்றுதேகமு மாயிற்று.

கதி

(கவி - எ௫ - அ - கை.)

நிசவாயுக்களி னிலக்கணங் கூறுவான் வேண்டிப் பிராணாதி சத்தவாயு க்களி னிலக்கண மிவையென வுணர்த்துகின்றது.

நின்றிதயந் தனையடைந்து பிராணனுசு வாச
நிசுவாச மியற்றுமபா னன்குதத்தி னூற்றுச்
சென்றொழிய மலசலங்க ளொழித்தலுறுஞ் சமானன்
சேர்ந்துந்தி யன்னரச முறுப்பனைத்தும் பகுக்கு
மென்றுமுதா னன்களமுற் றும்காரம் புரியு
மிருந்தங்க மெங்கும்வியா னன்பரிக்கு முடம்பைக்
குன்றுதலி னாகன்சோம் பாவித்தல் விளைக்குங்
கூர்மனல் விக்கலொடு தேக்குவரு மன்றே.

[பொழிப்புரை.]

நின்றிதயந் தனையடைந்து பிராணனுசு வாச நிசுவாச மியற்றுமபா னன் குதத்தி னூற்றுச் சென்றொழிய மலசலங்க ளொழித்தலுறும்" எ - து. பிராண வாயுவான திதயஸ்தானத்திற் றங்கிநின் றுசுவாச நிசுவாசங்களைச் செய்யாநிற் கும். அபானவாயுவானது குதஸ்தானத்திலடைந்து தேகத்தினின்று நீங்க மல சலங்களை நீக்கிக்கொண்டிருக்கும். "சமானன சேர்ந் துந்தியன்ன ரச முறு ப்பனைத்தும் பகுக்கு மென்றுமுதா னன்களமுற் றுற்காரம் புரியும்" எ - து சமானவாயுவானது நாபிஸ்தானத்தினின் றுண்டவன்னரசத்தை யவயவமு மூவதும் வியாபிக்கச்செய்யும். உதானவாயுவானது கண்டஸ்தானத்திற்றங்கி யெப்போதும் வாந்திபண்ணும்படியாகச் செய்யும். "இருந் தங்கமெங்கும் வியா னன் பரிக்கு முடம்பைக் குன்றுதலி னாகன்சோம் பாவித்தல விளைக்குங் கூர் மனல் விக்கலொடு தேககுவரும்" எ - து. வியானவாயுவானது சாவாங்கமும் வியாபித்துநின்று தேகத்தைத் தாங்கிக்கொண்டிருக்கும். சற்றுஞ் சுருங்காத நா கவாயுவானது சோம்பலையுங் கொட்டாவியையும் விளைத்துக்கொண்டிருக்கும். கூர்மனென்னும் வாயுவினால் விக்கலு மேப்பமு முண்டாகும். எ-று அன்று - ஏ - அசைகள். பிராணன் - இயற்றும். அபானன் - ஒழித்தலுறும். சமானன்- பகுக்கும். உதானன் - உற்காரம்புரியும். வியானன் - பரிக்கும். நாகன் - விளை க்கும். கூர்மனல் வருமெனமுடிக்க. உசுவாச நிசுவாசமெனல் - காற்றைவாங் கலும் விடுத்தலுமெனக்கொள்க. (எ௫)

(கவி - எசு - அ - கை.)

முன்னிறுத்தமுறையா லேனைய மூன்றுவாயுக்களி னிலக்கண மிவைய வுணர்த்துகின்றது.

தும்மலுட னிருமல்வருங் கிரிகரனு னகுதல்
சொல்லுதலாங் தேவதத்த னுற்சோக ராக
மென்மைதருந் தனஞ்செயனத் தனஞ்செய்னும் வாயு
வியனுயிர்போ யைந்நாளின் வீங்கிவெடித் தகலு
மிம்மையினு காதிபுற வாயுக்க ளாந்தா
யிசைத்திடுங்கன் மேந்திரியங் கட்கவைசேட் டிகரும்
தன்மையாம் பிராணுதி பஞ்சவா யுக்க
டாமியக்கும் விடாமன்ஞா னேந்திரியங் களையே.

[பொழிப்புரை]

தும்மலுட னிருமலவருங கிரிகரனு னகுதல சொல்லுதலாங தேவதத்த னுற்சோக ராக மென்மைதருந தனஞ்செயன்" எ - து. கிரிகரனென்னும் வாயுவினால தும்மலு மிருமலு முணடாகும். தேவதததனென்னும் வாயுவினுல நகைததலும் பேசுதலு முணடாகும் தனஞ்செயனென்னும் வாயுவினுல் துன்பமின்பஙகள் மெலலவிளையும் "அத்தனஞ்செயனும் வாயு வியனுயிாபோ யைந்நாளின் வீஙகி வெடிததகலு மிம்மையி னுகாதி புறவாயுகக ளாநதா யிசைத்திடுஙகன் மேநதிரியங கட்கவைசேட் டிகரும்"எ - து அநதத தனஞ்செயனென்னும் வாயுவானது நிறைந்த வுயிர்நீஙகிய வைநதாநாளிற சரீரநீஙகிக கபாலம் வெடித் திச்சரீரததினின்று நீங்கும் நாகன்முதலிய புறவாயுககளானவை யைந்தெனக கூறபபடுங கனமேநதிரியஙகளுக காதாரமாகிறபதா லவையசையும். "தன்மையாம் பிராணுதி பஞசவாயுகக டாமியககும விடாமன் ஞானேநதிரியஙகளை" எ - து தத்த மியலபினிறபனவாகிய பிராணன்முதலிய பஞ்சவாயுககளும் ஞானேநதிரியஙக ளைந்தையும் விடாம லசைததுககொணடிருக்கும். எ - று. ஏ - அசை இரணடாமடியும் நான்காமடியும் னகரவெதுகைவந்தது, மெல்லினவெதுகைபறறியென்க "என்னை"வருககநெடிலினம் வந்தாலெதுகையு மோனையுமென் றெருககபபெயரா னுரைக்கபடுமென் றிலக்கணமிருப்பதனுலென்க.

நாகாதி புறவாயுக்க ளெனவே, பிராணுதி யந்தரவாயுக்களெனவும், மேற்கூறும் வயிரம்பனுதிய - அகவாயுககளெனவுமாம். ஆகவே, புறம்பிலுள்ள கன்மேந்திரியஙகளைச் சேட்டிப்பித்தலின், நாகாதியைப் புறவாயுக்களெனவும், இடையிலுள்ள ஞானேந்திரியங்களை யசைப்பிததலின், பிராணுதியை யந்தரவாயுக்களெனவும், அகத்திலுள்ள வந்தக்கரணஙகளை யசைப்பித்தலின், வயிரம்பனுதியை யகவாயுக்களெனவுங் கொள்க.

(கவி - எள். அ - கை.

வைரம்பன்முதலிய பஞ்சவாயுக்களின் றொழில்களும பஞ்சபூதங்களி ன் றொழில்களுந் தாமங்களும் அதிதேவதைகளு மிணையவென வுணாததுகின் றது

சாற்றின்வயி ரம்பன்முக் கியன்பிரபஞ் சனனந
தரியாமி யொடுமகாப் பிராணனெனும் பெயாகொள
காற்றிவைகள் சீவசம் பந்தமா யேயுட்
கரணங்க ளியக்கியிடு மணமுதலோ திற்கும்
பாற்றிகழும் வியாபாரம் பொறைபிண்டி கரணம்
பாகமொடு விரகமிடங் கொடையாகும் தரும
மாற்றலுறு திண்மைநெகிழ் வழற்சிபரி வெளியா
மயனெடரி யரனீசன் சதாசிவன்றே வதைகள.

[பொழிப்புரை.]

சாறறினவயி ரமபன்முக கியன்பிரபஞ் சனனந தரியாமி யொடுமகாப்பி ராணனெனும் பெயாகொள காறறிவைகள" எ - து சொலலுமிடத்தில வயிர ம்பன் - முககியன் - பிரபஞசனன் - அநதரியாமி - மகாபபிராணனென்னும் பெயர்களைககொணட விநதவாயுககள் "சீவசம்பநத மாயே யுட்கரணஙக ளியக கிவிடும்" எ - து சீவனுடன சமபநதபபட் டநதககரணஙகளைநதையு மியககி விக்கும்."மணமுத லோநதிறகும் பாறறிகழும வியாபாரம பொறைபிணடி கரண ம் பாகமொடு விரகமிடங கொடையாகும்" எ - து மணமுதலிய பஞசபூதத திற்கு மவ்வவற்றி னிடமாகநிகழுந் தொழிலகள் , பொருத்தலும்-பிணடிகரித்த லும் - அன்னபானாதிகளைப பாகமாககலும் - ஈரததை யுலாததலும் - சமஸ்த்த த்திற்கு மிடஙகொடுத்தலுமாம். "தரும மாறறலுறு திணமைநெகிழ் வழற்சிபரி வெளியா மயனெடரி யரனீசன சதாசிவன்றே வதைகள" எ - து. அவற்றி ன் றர்மங்கள் , மிகவும் வலியுள்ள கடினமும் - நெகிழச்சியும் - வெபபமும் - பரிசமும் - வெளியுமாம் இவறறிற கதிதேவதைகள் , பிரமனும் - விஷ்ணுவு ம் - உருத்திரனும் - மகேசனும் - சதாசிவனுமாம். எ - று. மண்முதலோந்திற்கு [illegible], வியாபாரமும் - தருமமும் - தேவதைகளுந் தனித்தனி வந்தமைகா

பரிசம் - பரியெனக் கடைக்குறையாயிற்று. வயிரம்பனாதிய பஞ்சவாயுக் [illegible] சீவசம்பந்தமா யுட்கரணங்களை யியக்கியிடுமென்றது ; உள்ளத்தை வயிர [illegible] - மனதை முக்கியனும்-புத்தியைப் பிரபஞ்சனும் - சித்தத்தை யந்த

ரியாமியும - அகஙகாரத்தை மகாப்பிராணனும் - அசைபபிததலாம். மண்முத லேந்திறகும் வியாபாரம் - தருமம் - தேவதையென்றது ; நிரலே மண்ணிற்குப் பொறுத்தலும் - வன் மையும் - அயனும், நீரிற்குப் பிணடிகரித்தலும் - நெகிழ் சசியு-மரியும், தீககுப் பாகித்தலு-மழறசியு-மரனும், காறறிற் குலர்த்தலும்-பரி சித்தலும் - மயேசனும், விணணிற் கிடஙகொடுத்தலும் - வெளியும்-சதாசிவனு மாம் இவறறி லுறபததிக கிரமப்படி யுள்ளமுஞ் சோத் தந்தககரண மைந்தெ னக்கூறியது. (௭௭)

(கவி - ௭௮ அ - கை.)

அபபஞ்ச பூதஙகளின் குணஙகளுந் திரிபுடியி னிலககணஙகளு மினைய் வென்வுணா ததுகின்றது

கந்தமுத லாயினவே குணங்களவை தம்முட்
ககனத்திற் கொலியொன்றே வளிக்கிரண்டே றுடனே
யந்தழலுக் கொளியொடுமூன் றறுக்கிரத மொடுநான்
கைந்துமண மொடுபுவிக்கென் றறிகதிரி புடிகண்
முந்துஞா திருஞான ஞேயமா மிவற்றின்
மூலவகங் காரஞ்சேர் சிவசை தன்னிய
நந்துஞா திருமனத்திற் கதுவறிவு ஞான
நவின்றபவு திகவிடய ஞேயமென வறியே.

[பொழிப்புரை]

கந்தமுத லாயினவே குணஙகளவை தம்முள்" எ - து. கந்தமுதலாகச் சொல்லப்பட்டவைந்துமே யபபஞ்சபூதத்தின் குணஙகளாம. அககுணஙகளுள். "ககனததிற கொலியொன்றே வளிககிரண்டேறுடனேயந்தழலுக கொளியொடு மூன் றறற்கிரத மொடுநான்கைகது மணமொடு புவிக் கெனறறிக" எ-து. ஆகா யததிற கொலியொன்றும் - காறறிற்குச் சத்தபரிசமிரணடும் - அழகியவக்கினி ககுச சத்த பரிச வொளி மூன்றும- தணணீருககுச சததபரிசவொளி ரசம் நா ன்கும்-மண்ணிற்குச சதத பரிச வொளி ரச கந்தமைநதுமென விசாரித்தறிதி. "திரிபுடிகண் முந்துஞா திருஞான ஞேயமா மிவறறுள்" எ - து. திரிபுடிக ளாவன;முதலிலுள்ள ஞாதிருவும் ஞானமும் ஞேயமுமாம். அவைகளில்; "மூ லவகங காரஞ்சேர் சிவசை தன்னிய நந்துஞா திருமனத்திற் கதுவறிவு ஞான நவின்ற பவுதிகவிடய ஞேயமெனவறி" எ - து. மூலவகங்காரத்தோடு சம்பந் தித்த சிவபோதமே குன்றுத ஞாதாவும்-அந்தக்கரண பிரிதிபலன [illegible] மே ஞானமும் - முன்னர்கூறிய பூதபவுதிகவிடயமே ஞேயமுமாமென [illegible]

[illegible]. ஏ - அசை. எனவே, சத்தபரிசாதிகளில் - ஆகாயத்திற்கொன்றும்,காற்றிற்கிரண்டும், அக்கினிக்குமூன்றும், சலத்திற்குநான்கும், மண்ணிற்கைந்துமென்றாயிற்று. அறிவானு-டறிவும்-அறிபடுபொருளுந்-திரிபுடியெனக்கொள்க. பூதமு மறிபடுபொருளாதலின், பவுதிகத்தோடு பூதத்தையும் வருவித்தாம். அறிபடுபொருளை விடயமென்றூா. (எஅ)

(கவி - எகூ. அ - கை.)

பூதமுதற பிரமமிறுவாயுள்ள விருபத்தொன்பது தத்துவங்களையு மிவையெவை யுணர்த்துகின்றது.

ஈங்குமன மிருபத்து நான்காவ தாகு
மிருபத்தைந் தாவதுதான் மூலவகங் கார
மாங்கதனை யடைதலுறு சிதாபாச சீவ
னறையினிரு பத்தாறு மவன்மாயை மருவு
மோங்கொளியா மீசனிரு பத்தேழா மவனவ்
வுயிர்முதலாந் துரியனிரு பத்தெட்டா மவனு
நீங்கலரு மீசனதிட் டாத்திருவாம் பிரம
நிகழ்த்தினிரு பத்தொன்ப தாவதுவா மன்றே.

[பொழிப்புரை.]

ஈங்குமன மிருபத்து நான்காவ தாகு மிருபத்தைந்தாவதுதான் மூலவகங்காரம்" எ - து. இவ்விடத்தில் மனமானது - இருபத்துநான்காந் தத்துவமாம், மூலவகங்காரமான திருபத்தைந்தாவது தத்துவமாம். "ஆங்கதனை யடைதலுறு சிதாபாச சீவ னறையினிரு பத்தாறுமவன்" எ - து அந்தமூலவகங்கார சம்பந்தமுள்ள சிதாபாச சீவனனவன் சொல்லுமிடத் திருபத்தாறுவது தத்துவமாவன். "மாயை மருவுமோங்கொளியா மீசனிரு பத்தேழா மவனவ்வுயிர்முதலாந் துரியனிரு பத்தெட்டாமவனும்" எ - து.மாயாசம்பந்தமுள்ள மிகப்பிரகாசரூபமானவீச னிருபத்தேழாவது தத்துவமாவன்.அந்தவுயிருக் கதிஷ்[illegible]னுள்ள கூடஸ்த னிருபத்தெட்டாவது தத்துவமாவன் "நீங்கலரு மீசனதிட் டாத்திருவாம் பிரம நிகழ்த்தினிரு பத்தொன்ப தாவதுவாம்" எ - து. [illegible]கரிய வீசனுக் கதிட்டானமா யின்றுள்ள பிரமத்தைப்பற்றிச் [illegible] திருபத்தொன்பதாவது தத்துவமாம். எ - று. அன்று - ஏ - அ

மூலாங்காரத்தின் சத்துவத்திற் கரணநான்கும், ஞானேந்திரியமைந்து மாகவொன்பதும், இராஜசின் வாயுவைந்துங் கன்மேந்திரியமைந்து மாகப்பத்தும், தமசின் பூதமைந்து மிவ்விருபத்து நான்கின் முதன்மையான மனமுமி வற்றைத்தானென் றபிமானித்திருக்கு மகங்காரமு- மதற்காதாரமான சீவனு- மதற்குவியாபகமான வீசனு-மிவ்விரண்டிற் கதிஷ்டானமான கூடஸ்தனும்- பிரமமுமாக விருபத்தொன்பதுந் தத்துவமாமென்க.

விஞ இங்ஙனமாயி னேனைய நூல்களிற் சத்துவத்திற்பத்து-மிரஜசிற்ப துதுந்-தமசிற்பதினொன்று மிவைகட்குக் காரணமான - அவித்தை-வித்தை-சீவன்-ஈசன் - பிரமமைந்து மாகமுப்பத்தாறெனக் கூறியதென்னை?

விடை இந்நூலாசிரியர் சத்துவத்தினுதித்த பத்தில் முன்னுதித்த ஞானமொன்றை யகங்காரத்திலடக்கி யொன்பதெனவு,மிரஜசினுதித்த பத்தும் பத்தேயெனவுந், தமசினுதித்த பதினொன்றில் - அஸ்தி-மாமிசம்-சருமம்-நரம்பு- உரோமம்-மசசை - யென்கின்றவாறையு மிவற்றின்காரணமாய பஞ்ச பூதத்திலடக்கியு முன்னீக்கிய ஞானத்தை யகங்காரான்மாவெனச் சேர்த்தும்,அவித்தை வித்தை யிரண்டையுஞ் சீவேஸ்வரரிலடக்கியும், பிரமத்தைக் கூடஸ்தரெனவிரிதது மாகவிருபத்தொன்பதெனக கூறினரென்க.

விஞ இந்நூலின் முறகூறிய வாயுககள் பதினைந்தைப் பின்னைந்தாகக் கூட்டியதென்னை?

விடை. நாகாதியென்ற புறவாயுககளைந்தையும் பிராணாதியைந்திலும், வயிரம்பணதிய வாயுவைந்தையுஞ் சீவனிலு மடக்கியதாலென்க.

விஞ. அற்றேல் - வயிரம்பணதிய வாயுக்களைச் சீவனிலடக்கியதென்னை?

விடை. இவ்வைந்தும் விராட்புருடனது பஞ்சவாயுக்களாதலிற் சீவசம்பந்தமா யிருந்ததென்க.

விஞ. அற்றே-லித்தத்துவங்க ளடங்கியவிடத் துள்ள சீவனிடத்திருக்கின்ற தெங்ஙனம்?

விடை இருபத்துநான்கு தத்துவங்களொடுங்கிய சுழுத்தியவத்தை[illegible] பிராணனைசைத லனுபவமிருத்தலினாலும், பிராணனுமல்லவென்ற-சசி[illegible] போதக் கவியினனு மிருக்கின்றதெனக்காண்க.

விஞ. அங்ஙனமாயி னிச்சீவனிடத் திவ்வாயு வெவ்வணமிருக்கின்[illegible]

விடை, அவனுக்குச் சங்கற்பரூபமான அந்தக்கரணங்களை யசைப்பித்தலி னவனது ஜீவசத்தியாயிருக்கின்றதென்க. இதனு லிப்பிராண னன்றென்பது தோன்ற மகாப்பிராணனென்னு நாமம்வந்தது.

முற்கூறிய சீவர்கட் கவித்தையினீக்கமும் வித்தையினுக்கமு முண்டாகு நிமித்த மதற்குச் சாதனமாகக காலமுதற்பௌதிகமீறுய தததுவஙக ளீசுரன து கிருபாதிருஷ்டியினு லவாந்தரமாக வுண்டாயிற்றென்க (எக)

(கவி - ௭௦. அ - கை.)

முன்னர்கூறிய சிருஷ்டிக ளிருவிதமாமென வுணர்த்துகின்றது

தெரித்தகா ரியத்தோற்ற மிருவகையாங் கிரம
சிருட்டியுக பற்சிருட்டி யெனமூலப் பகுதி
விரித்தமக தத்வமக முந்தன்மாத் திரையும்
விளங்குசத்தப் பிரகிருதி யொடுபஞ்ச பூத
முரைத்தவற்றிற் பிரமாண்ட பிண்டமுத லாய
வுலகுதயந் தான்கிரம சிருட்டிநிறை கடலின்
மருத்துவசத் தலையாதி போற்சிவத்தின் மாயா
மயநாம வுருவநிகழ் வேயுகபற் சிருட்டி.

[பொழிப்புரை.]

தெரித்தகா ரியத்தோற்ற மிருவகையாங் கிரம சிருட்டியுக பறசிருட்டி யென" எ - து. முன்னாதெரிவித்த மாயாகாரியத்தோற்றங கிரமசிருஷ்டி யுகபற்சிருட்டியென விருவகையாகிறகும் "மூலப்பகுதி விரித்தமக தத்வமகமு ந் தன்மாத்திரையும் விளங்கு சததப் பிரகிருதி யொடுபஞ்சபூதம்" எ - து. மூலப்பகுதியும் - அதினின்று விரியப்பெற்ற மகதத்துவமும் - அகங்காரதத்துவமும் - பஞ்சதன்மாத்திரையும் - விளங்குகின்ற சத்தப்பிரகிருதியும் - தூலபஞ்சபூதமும். "உரைத்தவற்றிற் பிரமாண்ட பிண்டமுதலாய வுலகுதயந் தான்கிரமசிருட்டி" எ - து. இங்ஙனங் கூறியவற்றினின் றெழுந்த பிரமாண்டமும்-பிண்டமும் - இவைபோல்வன பிறவுமாகின்றுள்ள வுலகத்தோற்றமே கிரமசிருட்டியெனவும்; "நிறைகடலின் மருத்துவசத் தலையாதி போற்சிவத்தின் மாயாமயநாம வுருவநிகழ்வேயுகபற் சிருட்டி" எ - து. பெரியகடலின்கண் காற்றினாலெழு மலைமுதலியனவை தோன்றுமோ - அதுபோல - சிவத்தின் மாயையைக்காரணமாக வெழு மதின்மயமாகின்றுள்ள நாமரூபப்பிரபஞ்ச மொருங்கெழுச்சியே யுகபற்சிருட்டியெனவும் பெயர்பெறும். எ - று. தெரித்தவென்பன பிறவினைகள். காரியத்தோற்ற மென்பதனுற் செகத்தை யுணர்த்தும்.

பிரமாண்டமென்பது, பஞ்சபூதாகாரமாய வுலகமுதலிய யாவுஞ் சேர்ந் தோன்றாயிருக்கு மண்டமனைத்துங்கூடியது பிண்டமென்ப, தவற்றிற் சஞ்ச ரிக்கப்பட்ட பஞ்சபூதகாரியமான பௌதிகவடிவமான தேகங்களாம். பிரமா ண்டத்தைப் புவனபோகமெனவும், பிண்டத்தைத் தனுகரணமெனவுங்கொள் க அவற்றை யண்டத்தினுள்ள வுலகபேதங்களைப் பிண்டித்த பொருளென்பா ருமுளர் அஙஙனங்கூறுதல் சீவர்கட்குத் தேகாதி தத்துவந் தோன்றினமை யானு, மவாககே பிரதானமா யிச்சிருட்டி வந்தமையானுங குற்றமாமென்க

பிரகிருதிமுதற் பிருதிவிபரியந்த மொன்றின்பின் னொன்றடைவாகவுதி ததல கிரமசிருஷடியு, மொருஙகேயுதிதத லுகப்ற் சிருஷடியுமாமென்க (அ௦).

(கவி - அக. அ - கை.)

நிாவிகார பிரமததில விகாரமாகின்றுள்ள சகமாதிமூன்று மெங்ஙனந் தோற்றினவெனற குததரஙகூறுகின்றது

சுருதிசித்த மாதலினு லிவையுடன்பா டாகும
தூயபரப் பிரமமாம விகாரமிலா விறையாற
றருதலெங்ஙன் காரியங்கள் சடப்பகுதி யென்னிற்
றாளிலாக் கதிர்ச்சிலையி லிச்சையிலா தெழுந்த
பரிதியினு லழல்வரல்போற பரசிவனுன மூலப்
பகுதியிடை மகதாதி காரியங்கள வரற்குக
கருதின்முர ணிலையாகு மெனப்புகல்வ ரறிஞர்
காரியஙக டோற்றுதனல் வகையவையீண டுரைப்பாம்.

[பொழிப்புரை.]

சுருதிசிதத மாதலினு லிவையுடன்பா டாகும்" எ-து வேதசம்மதமாத லா லிவ்விருவகை சிருட்டியு மெமககு முடன்பாடாகும். "தூயபரப்பிரமமாம் விகாரமிலா விறையாற றருதலெஙஙன் காரியங்கள் சடப்பகுதி யென்னில்" எ-து பரிசுத்தபிரமமெனபபடும் நிர்விகாரசிவத்தினால மாயாகாரியஙகளாயு ஞ் சடரூபமாகவு நின்றுள்ள சகமாதி மூன்றுபிரிவுக ளெங்ஙனந் தரப்பட்டன வென்னில்."தாளிலாக் கதிர்ச்சிலையி லிச்சையிலா தெழுந்த பரிதியினு லழல் வரல்போற் பரசிவனுன் மூலப் பகுதியிடை" எ-து. புடைபெயர்ச்சியின்றி ய சூரியகாந்தகல்லி லிச்சாவெத்தனமின்றி யுதித்த பூதசூரியனு லக்கினிதோ ன்றுமாறுபோன்று, பரமசிவனுல் மூலப்பகுதியினிடத்தில், "மகதாதிகாரிய

ங்குள் வாறகுக் கருதின் மூரணிலேயாகுமெனப் புகல்வாறிஞர்" எ-து. மகதத் துளமுத துலகேறிய காரியங்கள் செனித்தற்கு யோசிக்குமிடத்து யாதொருத தட்டியு மில்லையாமென்று சத்துக்கள் கூறுநிற்பா. "காரியங்கடோற்றுதனு லவகையுறவயீண் டுரைப்பாம்" எ-து. மாயாகாரியங்கள் தோற்றுதல் நான்கு வகைப்படும். அவற்றை யிங்கேயெடுத்துரைக்குதும். எ - று.

சுத்தமாயையிற் றோன்று மீசனுக்குச் சூரியனையும், மூலப்பகுதிகுச் சூரியகாந்தக் கண்ணாடியையும், சகதிற் கழலையு மூவமித்ததென்க. (அக)

(கவி - அஉ. அ - கை.)

இஙஙனமாய சிருட்டி நன்கு விளஙகுமாறு நானகுவகை திஷடாந்தஙக ளினையவென வுணாததுகினறது

விருத்திபரி ணுமமா ரம்பமவிவர்த் தகமாம
விரிந்தபடங் குடிபாவம் பாறயிரா கார
மூைாத்தலுறு தந்துபட நியாயம்வன் பழுதை
யுரகவுரு முறையவறறின் றிட்டாந்த மாகும்
வருத்துகபி றரவங்கந் திருவநகர் குற்றி
மகன்கனவிந் திரசாலஞ் சுத்திகா ரசிதந்
தெரித்தவிவை முதலனவாங் கிரிதலின்மெயப் பொருளிற்
றிரிந்திடுபொய்ப் பொருளதுகற் பிதமாதற் குவமை.

[பொழிப்புரை.]

விருத்தி பரிணும மாரமபம் விவாததகமாம" எ - து.விருததி-பரிணுமம்-ஆரம்பம் - விவாத்தகமெனநான்காம். "விரிந்தபடங குடிபாவம் பாறயிரா கார முைாத்தலுறு தந்துபட நியாயம்வன் பழுதை யுரகவுரு முறையவறறின் றிட்டாந்தமாகும்" எ-து விரிநதவஸ்திரமே வீடுருவமாநிறறலும- பாலேதயிர்வடிவாகிற்றலும - சொல்லுகின்றதூலே வஸ்திரரூபமா நிற்குஞாயமும் - வலியப ழுதையே பாம்புருவாகிற்றலுமாகிய விவையே யவற்றின் திட்டாந்தமுறைக ளாம். "வருத்துகபி றரவங்கந் திருவநகா குற்றி மகன்கனவிந் திரசாலஞ் சுத் திகா ரசிதந்தெரித்தவிவை முதலனவாம" எ - து. நடுெங்கவிக்கும் ரசகுசாப்ப மும் - [illegible] - கட்டை - பிறகன்னலும் - சொப்பனமும் - இந்திரசால [illegible] வெள்ளியுமாகத் தெரிவித்த விவைமுதலியவைகளாம். "கிரி [illegible] மெய்ப்பொருளிற் றிரிந்திடுபொய்ப் பொருளதுகற் பிதமாதற் குவமை" [illegible] தன் றமெய்ப்பொருளைத்தா மின்றுள்ள மெய்ப்பொருளாகிய பிரம [illegible] மாறுதற்கிரிந்துள்ள பொய்யாகிய சகத்து கற்பிதமெனத் தெரி [illegible] கூறிய வுவமைகள். எ - து.

இவ்விருதத்தியர்தி நான்குபேதமும் பிரமத்திற் சுகமுண்டாகும் பேதங்களுக்குத் திட்டாந்தமெனக் காண்க முறையென்றதனால் விருத்தி-படம் வீடாதலும், பரிணாமம் - பால்தயிராதலும், ஆரம்பம்-நூந்துபடமாதலும், விவர்த்தகம் - ரச்சு சர்ப்பமாதலுமாம். வருத்துமென்றது, பிராந்தியினறை பயகம்பனுதி யுண்டாதல் திட்டாந்தம்-உவமை - ஒருபொருட்கிளவி (அ)

(கவி - அ௬. அ - கை)

உண்மையான பிரமததி லின்மையான செகசிவபரந் தோறறுமாயி னந்தப்பிராநதி யாருக்குவருமெனற விஞவிறகு விடை யினையதென வுணாததுகின்றது

பொய்ப்பொருளகம் பிதமாயிற றவிகாரி யாகப்
பொருந்துமுயி ரிடத்தெனின்முன் பிராநதியார்க் கென்னி
லொப்பில்சதி பதிரதிமா லுருவச்சொற் பனநதா
ஞெருமுனிவன பாலுதிப்பி னதனலங கவனுக
கெப்பழுது மிலாததுபோற் சான்றுமான் மாவி
லிலங்குகுண வுருவமாம பகுதியினல் மருளு
மெய்ப்பரிய ஞாதிருவும் பிராநதிஞா னமும்பொய
விடயஞே யமும்வரினு மவற்கிடையூ றிலேயே.

[பொழிப்புரை]

பொயபபொருள்கற பிதமாயிற றவிகாரி யாகப பொருநதுமுயி ரிடத்தெனின்முன பிராந்தியாாக கென்னில" எ - து. பிரிதிவிமுத ஞைதத்துவமிறுவாக்கிடநத பொயப்பொருள்களாகிய தத்துவஙக ளென்றும் நிாவிகாரியாக விளங்கிகொணடிருக்கு மான்மாவினிடத் தெங்ஙனங கறபிதமாகவுதித்த தெனின்; முற்கூறிய பிராந்தியானது யாருக்கெனவிஞவரும் அஙஙனம்வரின்" "ஒப்பில்சதி பதிரதிமா லுருவசசொற பனந்தா ஞெருமுனிவன் பாலுதிபபி னதனலங கவனுக் கெப்பழுது மிலாததுபோற் சான்றுமான மாவி லிலங்குகுண வுருவமாம் பகுதியினல் மருளும்" எ - து நிகரில்லாத கறபுடைத் தலைவியுந் தலைவனுங்கூடி யநுபவிக்கும் ரதிகாங்கிசை யென்னுமுருவமாக வோர்சொற்பனமான தோாயோகீஸ்வரனிடத்தி லுதிக்குமாயி னச்சொற்பனத்தா [illegible] மாக்கின்றுள்ள வந்தயோகீஸ்வரனுக்கு யாதோர்கலக்கமு மில்லாத [illegible] போன்று, என்றுஞ் சாட்சியாகின்றுள்ள வான்மாவினிடத்தில் [illegible] ற குணருபமாகின்றுள்ள மூலப்பிரகிருதியினல் மருளத்தக. [illegible] ஞாதிருவும் பிராந்திஞானமும் பொய்விடய ஞேயமும் வரினு மவற்கிடை [illegible]

"...." - து. மெய்ம்மையிழுந்த ஞாதாவும் - பிராந்திஞானமும் - மித்தியாவிஷயமான ஞேயமுந் தானேவரும். வரினும் - அந்தவான்மாவாகிற புருஷனுக்குக் கலக்கஞ்சற்றுமில்லை. எ - று. ஏ - அசை. யோகீஸ்வரனுக்குத் தன்பாலெழுந்த மோகசொற்பனத்தாற் சற்றுங் கலக்கமில்லாவாறுபோன்று, ஐயந்திரிபின்றி விளங்கு மான்மாவுக்குத் தன்பாலெழுந்த பிராந்திதிரிபுடியாற் சற்றுங் கலக்கமில்லையென்பது கருத்து. யகரவெதுகையிரண்டும் - ஆசெதுகை. இலாததுபோலில்லையென முடிக்க.

சகசநிஷ்டையையுடைய யோகிக் கிச்சாகக்கிரத்திற பிராரத்தவசமா யெவ்விதவனுபவம் வந்தாலு மவற்றைத் தனதுபிரமாநந்தமா யனுபவித்தலி னிவ்வுவமானங் கூறியதென்க. ஆயினவென்னும்பன்மை - ஆயிற்றெனல் பன்மைமயக்கம். உயிரவிகாரியென்றதனாற் கூடஸ்தனும். ஆகவே, அஃதேபிரம மென்பதாயிற்று. முனிவன்போல வாத்மா, கனவைப்போலச் சங்கற்பம். சதிகேளிமயக்கம்போலத் திரிபுடிகள். (அ௯)

(கவி - அ௬. அ - கை.)

சீவாகள மறைப்பைநீங்குவான்வேண்டி யுண்டாய செகசிருட்டியிற சீவகற்பித மிதனையவென வுணாத்துகின்றது.

இறைவனாற் றோன்றியமா யாமயமா முலக
 மிருந்தபடி யிருக்குந்தன் வடிவினா லதனுண்
மறைவிலாச சீவபுத்தி விருத்திகற் பிதமா
 மற்றொருபோக் கியவடிவ மேவிருப்பு விடயம்
வெறுவிதாம் வெறுப்புவிட யததினொடு நொதுமல்
 விடயமெனத் திரிவிதமா மவையாவை யென்னின்
முறைமையின்வனி தாதிபுலி யெழுவாய்வீழ் துரும்பு
 முதலனவா மெனமொழிவர் முற்றுமுணர்ந் துடையோர்.

[பொழிப்புரை.]

இறைவனாற் றோன்றியமா யாமயமா முலக மிருந்தபடி யிருக்குந்தன் வடிவினா லதனுள்" எ - து. பரமசிவனாற் கற்பிதமாகச்செனித்த மாயாமயமான ...... தனதுகற்பிதவடிவினால் முன்னிருந்தவா றெங்ஙனமோ வ...... அவ்வாமாயவுலகத்திலுள். "மறைவிலாச் சீவபுத்திவிருத்திகற்பிதமா மற்றொருபோக் கியவடிவ மேவிருப்பு விடயம் வெறுவிதாம் வெறுப்புவிட யத்தினொடு நொதுமல் விடயமெனத் திரிவிதமாம்" எ - து.

மறைவுக்குடன்படாத சீவனது புத்திவிருத்தியிற் கற்பிதமாகவெழுந்த வேறொருபோக்கியவடிவமே - பிரியவிஷயமும், அதற்குமாறுய வெறுப்புவிடயமும், உபேட்சாவிடயமுமெனத் திரிவிதமாகிற்கும் "அவை யாவையென்னின் முறையின்வனி தாதிபுலி யெழுவாய்வீழ் துரும்புமுத லனவா மெனமொழிவர் முற்றுமுணாந் துடையோர்'' எ - து. அந்தத்திரிவிதமானவை யாவையெனின், முன்னிறுத்தமுறையே பொன்முதலியனவும் - புலிமுதலியனவும் - வீழ்கின்ற துரும்புமுதலியனவுமாமென முற்றுமுணாந்த சததுககள் சொலலுவர். எ-று. நொ-துன்பப்படு து-உண என்பனபுணாந்து, நொதுமலென்றுயது. ()

(கவி - அரு. அ - கை.)

ஈஸ்வரசிருஷ்டியி னொருமையுஞ் சீவசிருஷ்டியின் பன்மையு மினையவென வுவமானபூர்வகமாக வுணர்த்துகினறது.

ஈசனிரு மிதமான வேகாகா ரமும்பி
னெய்துமுயிா கற்பிதமாம் பலவாகா ரமுமோர்
தேசவிட யததுறுதற் கெவ்வாறிங் கென்னிற்
றிட்டாந்த மீசனிரு மிதமணியா திகடாம்
பேசிலொரு தகையாயப்போத் திருபுத்தி தன்கற்
பிதநானு விதத்தினு லவைதமைப்பெற் றோனுக்
காசைவிட யமதாகிப் பெறுற்குவெறுப் பாகி
யரியதுற விக்குபேட சாவிடய மாமே.

[பொழிப்புரை.]

ஈசனிரு மிதமான வேகாகா ரமும்பினெய்துமுயிர் கறபிதமாம் பலவாகா ரமுமோர் தேசவிட யத்துறுதற் கெவ்வாறிங்கென்னில்" எ - து. ஈஸ்வரசிருஷ்டியான வேகாகாரமும - அதின்பின்ன ருயிாகறபிதமாக வெய்திய நானுவித போகாகாரமு மோர்தேசவிடயத்தி லடைதற கேதிஙகெவவாறெனனில். "திட்டாந்த மீசனிரு மிதமணியா திகடாம் பேசிலொரு தகையாய" எ - து. இதுபற்றிக்கூறுந் திட்டாந்தமாவது ; ஈஸ்வரகற்பிதமாயுள்ள விரத்தினமுதலியவைகள் பேசுங்கா லொரேபிரகாரமாயும். "போத்திருபுத்தி தன்கற்பித நானுவிதத்தினு லவைதமை பெற்றோனுக காசைவிட யமதாகி" எ - து. சீவனது புத்திவிகற்பங்கள் பலவாருச் சிதைந்துநிற்கும் காரணததா லந்தவிரத்தினமுதலியவைகளை யடைந்தவனுக்குப் பிரியவஸ்துக்களாயும். "பெறுற்கு வெறுப்பாகி யரியதுறவிக் குபேட்சா விடயமாம்" எ - து. ஞானங்காரணத்தா லவைகளை யடையப் பெறுதோனுக் கவை யப்பிரியவஸ்துவாயும், மிக்க நிஷ்காமியம் வாய்ந்தோா

[illegible] லிவை யிருந்வையதாயுமிற்கும். எ - று. தாம் - ஏ - அசைகள். மணியாதிக ள் - ஒருமையாய் - ஆசைவிடயமதாகி - வெறுப்பாகி - உபேட்சாவிடயமாகி நிற்குமெனமுடிக்க. விடயமெனலை - வெறுப்பாகியெனற்குங் கூட்டுக. மணியா தியவை - ஈஸ்வரசிருட்டியெனவும், இவற்றிலெய்திய விருப்பு வெறுப்பு வுபே ட்சையாகிய மூன்றுஞ் சீவசிருட்டியெனவுங் கொள்க. (அரு)

(கவி - அசு. அ - கை.)

இன்னுமிவ்விருவகை சிருஷ்டிக ளிங்ஙனமாகவு நிறகுமெனலை யுணர்த் துகின்றது

அப்பொருடா னேவிளங்கித் தோன்றுறுதம் கின்னு
மறைதுமோா திட்டாந்தந் தோன்றியவோர் மாது
மெய்ப்பரிசோர் திறமாகப போத்திருக்கள புத்தி
விருத்திகற பிதத்தினுற் றுதைக்கு மகளாய்த்
தப்பில்கொழு நற்குக்கா தலியாகி மகற்குத்
தாயாகி மாதுலற்கு மருகியா யிருப்ப
விப்பரிசு விடயமெலா மிறைவனிரு மிதமு
மிலங்குயிர்கற் பிதமுமென விருதிறத்துற் றிடுமே.

[பொழிப்புரை]

அப்பொருடானேவிளங்கித் தோன்றுறுதற கின்னு மறைதுமோா திட் டாந்தம்" எ - து. அந்தவீஸ்வரசிருட்டிகளி லொன்றே யெவாக்கும் விளக்க மாகத் தோன்றும்வண்ண மின்னு மோாதிஷடாநதங்கூறுதும். "தோன்றிய வோர் மாதுமெய்ப் பரிசோர் திறமாகப் போத்திருக்கள் புத்திவிருத்திகற்பிதத் தினுல்" எ - து. ஈஸ்வரசிருஷ்டி காரணமாக வுதித்த வொருஸ்திரீ-தனதுதே கத்தன்மையொரேயிரகாரமாகவிருக்க, சீவர்களின் பேதபுத்தி விகறபத்தால். "தாதைக்கு மகளாய்த் தப்பில்கொழு நற்குக் காதலியாகி மகற்குத் தாயாகி மா துலற்கு மருகியா யிருப்பள்" எ - து. தனது தந்தைக்கு மகளாயும் - குற்றம ற்ற தனது நாயகனுக்கு மனைவியாயும் - தன்மகனுக்குத் தாயாயும் - தன்மாம னுக்கு மருமகளாயும் - இருப்பள். "இப்பரிசு விடயமெலா மிறைவனிரு மித மு மிலங்குயிர்கற் பிதமுமென விருதிறத்துற்றிடும்" எ - து. இவ்வாறே சகல [illegible] ஈஸ்வரசிருஷ்டியென்றும் - இவைகாரின்ற சீவசிருஷ்டியென்று மிருதிறத்தனவாகிற்கும். எ - று. ஏ - அசை. மாது - மகளாய் - காதலியாகி - [illegible] மருகியாய் - [illegible] பெயர்மாத்திரமேயு [illegible] புத்திபேதமிய பேத

விகற்பங்க ளவ்வடிவுக்குவந்தது சிவசிருட்டியெனவுங் கோடற்குமாறென்னை? இன்றாமையால் மறுக்கற்க. மறுப்பார் - தம்மையாயாதார். அவர்கள் மதவ் தனெனற் கையமென்னை? இன்றாமையாற் றம்முள்முரணுவர். மெய்ப்பரிசெ ன்பதில் - யகரம் - ஆசெதுகை. (அ)

(கவி - அஎ. அ - கை.)

இதுகாறு மிருவகை சிருட்டிகளையுங்கூறி யினி சாஸ்திர மசாஸ்திர மி லையவென வுணாத்துகின்றது.

அன்னனிரு மிதபிரபஞ் சந்தான்வா திப்ப
தல்லாமை யானுதூ லாசிரிய நெறியால்
நன்னலரு முத்திசா தனமாகுந் தன்னு
னழுவவொண்ணு மையினுனு மனையதுதா னிற்க
வெண்ணரிய சிவகற் பிதமாய வவைதா
மிருப்பிரபஞ் சங்கள்சாத் திரத்தொடசாத் திரமாங்
கண்ணுமசாத் திரப்பிரபஞ் சத்திறனு மிரண்டாங்
கழறிற்றீ விரமந்த மெனவவையின் னொப்பாம்.

[பொழிப்புரை.]

அண்ணனிரு மிதபிரபஞ சந்தான் வாதிப்ப தல்லாமை யானுநூ லாசிரி ய நெறியா னணனலரு முத்திசா தனமாகுந தன்னு னழுவொணணு மையி னுனு மனையதுதா னிற்க'' எ - து. ஈஸ்வரசிருஷ்டியாகிய பிரபஞ்சமெனப்ப டுவது; உயிர்களை வருத்தறபாலதன்றாமையானும், சுவானுபவ நெறித்தாலன் றிச் சுருதிகுருநெறித்தா லடைதற்கரிய முத்திக்குச சாதனமாகிற்குந்திறத்ததா னும், உலகந்திரிசியமாதலி னெவரு மிதனைக கடக்க வொணணுமையினுனு மந்தக்காரிய மிருக்கட்டும். ''எணணரிய சிவகற் பிதமாய வவைதா மிருபிரப ஞ் சங்கள்சாத் திரத்தொ டசாத் திரமாம்'' எ - து. எண்ணி யளவிடுதற்கரிய சிவகற்பிதமெனப்படுபவை; சாத்திரப்பிரபஞ்சம்-அசாஸ்திரப பிரபஞ்சமென விருகூறுடையனவாகிற்கும். ''கண்ணுமசாத் திரப்பிரபஞ்சத் திறனு மிரண் டாங் கழறிற்றீ விரமந்த மெனவவையின் னொப்பாம்'' எ - து. வருத்தற்கிட மாயு மசாஸ்திரப்பிரபஞ்சமென்பது; சொல்லுமிடத்துத் தீவிரமெனவும் - ம ந்தமெனவும் - இருகூறதாகிற்கும். இனியவற்றையீண்டுணர்குதும். [illegible] மதிக்க [illegible] சகதுக்கங்களில் [illegible] ஞான [illegible] - [illegible]

விருக்கின்றதெனவுங்காட்டித்-தன்னைவிட் டதனோடற்குத் தான்சாதனக்கரு வியா நிற்றலு மியற்கையாகத் தன்பாலுடைமையி னுல்கையிஙனங் கூறினு. ரென்க. (அஎ)

(கவி - அஅ. அ - கை.)

இவ்விருவகையி னிலக்கண மினையவென வுணர்த்துகின்றது

சீவபர விசாரணையே யுளாத்தலரி தாஞ்சாத்
திரப்பிரபஞ் சங்காமா திகளேதீ விரமும்
காவலுறு சாதிகரு மாதிகமொ டேதான்
கருதுமனக் கற்பிதமே மந்தமசாத் திரத்தின்
மேவுறுமிவ் விருதிறமு மாருயிர்மெய்க் காட்சி
விரோதிகளா தலின்ஞானம் பயிறற்கு முன்ன
ரோவுவசாத் திரப்பிரபஞ் சந்தான்மெய்ஞ் ஞான
வுதவியா யான்மகாட் சியின்பின்விடு வதுவாம்.

[பொழிப்புரை.]

சீவபர விசாரணையே யுளாத்தலரி தாஞ்சாத் திரப்பிரபஞ்சம்" எ - து சீவேசரதிலக்கணங்களை விசாரித்துக்கொண்டிருத்தலே தனக்குவசனமாக நிற்றல் சாஸ்திரப் பிரபஞ்சமெனப்படும் "காமாதிகளே தீவிரமுங் காவலுறுசாதி கருமாதிகமொடே தான் கருதுமனக் கற்பிதமே மந்த மசாத்திரத்தின் மேவுறு மிவ்விருதிறமும்" எ - து காமக்குரோதாதிகள் வயத்தினிற்பதே தீவிரப்பிரபஞ்சமும் - விதிக்கடங்கிய வருணாச்சிரமதன்ம முதலியவற்றோடு தாமுடன்பட்டுச் சங்கற்பிக்கு மனக்கற்பிதமே மந்தபிரபஞ்சமுமாதலி னிவ்விருதிறத்தையே கூறப்படுவது,அசாத்திரப் பிரபஞ்சமெனப்படும். "ஆருயிர்மெய்க் காட்சி விரோதிகளாதலின் ஞானம்பயிறற்கு முன்னரோவுவ" எ - து. தீவிரம்-மந்தம் - என்னுமிவ்விரண்டு மாத்மதெரிசனத்திற்கு விரோதமாயிருத்தலின், ஞானாப்பியாசஞ் செய்தற்குமுன்னரே நீக்கற்பாலனவாம். "சாத்திரப்பிரபஞ்சந்தான் மெய்ஞ்ஞான வுதவியா யான்மகாட்சியின்பின் விடுவதுவாம்.எ - து சாத்திரப்பிரபஞ்ச மெனப்படுவது ; உண்மைஞானம் வாய்க்குமளவு முதவியாயிருந்து ஆத்மதெரிசனம் வாய்த்தபின்னர் நீக்கற்பாலதாம். எ - று. எனவே, சாத்திரப் பிரபஞ்சமே முக்கியமெனப்பெற்றாம். மந்தமென்பதினும்மை யெச்சவும்மை.

வனுத்மலாபமான சிற்றின்பத்தையடையு முத்தியாதியகூறல். தீவிரமென்ற து ; வனிதாதிபோக சம்பத்தின்மேற் காமிப்பது. மந்தமென்றது ; வருணாச்கி ரமதாமப்படி சொர்க்காபேக்ஷையாற செய்யுங்கருமம்

(பதசாரம்.)

நானுகியபிரமத்தி லததியாசமாகத்தோறறிய மூலாஞ்ஞானத்தினாற்றோ ன்ருத தன்னை யதாாத்தமாகத தரிசிக்குநிமிததஞ் சீவர்களுடைய வவித்தை யா நாசததின்பொருட் டீசுரானுககிரகத்தினாலுணடான சரீரத்தினின்று மிச் சநநமரணப பிரவாக ரூபத்திறகேதுவான காமாதிகளாகிய தீவிரத்தைநீக்கிமே றசெய்யுங கர்மஙகளின் மனுஷாநந்தமாதிய சுகஙகளை யனுபவிக்கும் பதப்பிரா ப்திகட் கேதுவாகுங காமரூபமான மந்ததததைநீககி மேனிஷகாமமான சற்கி ருததியங்களினாற் சிததசுததியு மதனாற சாதனசதுஷ்டயமு முணடாதலின், தீவிரமந்தஙகளையுடைய வசாத்திரபபிரபஞசம ஞானம்பயிறறகுமுன்ன மோ வுவவெனவும, இசசாதனத்தினாற் பரமாதம விசாரமபிறந ததனுன் மனனமு மதனு னிதிததியாசனமு மதனாற சமாதியுங கூடினவிடத்தி லஙஙனம் விசா ரிததவிசாரம் நீஙகலிற சாததிரபபிரபஞ்ச மெயஞுானவுதவியா யான்மகாட் சியின்பின் விடுவவெனவுங கூறினா இவ்விரணடும் விடுவதாயினும் அசாத்தி ர மான்மலாபததைக கொடாமலுஞ சாததிர மலத்தைககொடுதது நீஙகுமாதலி ன், இசசாததிரப பிரபஞச முமூட்சுககண முககியமாக விரும்பததக்கதாயி ற்று

வினு ஆத்மதரிசனததுக்கு விரோதமான தீவிரமநதமிரணடையுமுடை ய வசாத்திரப பிரபஞசத்தை விடத்தககதுதா னேனைய வொன்றை யெற்றி னுககு விடததககது ?

விடை பரமாதமவிசாரணையா லாத்மதெரிசனமாயினு மதறகதிஷ்டா னமான கூடஸ்தபிரமாயிககியத்தி லிவவிருதன்மையு நீஙகுமிடத தலத்தை விசாரிக்குஞ் சாததிரப்பிரபஞ்சமு நீஙகுதலாலென்க. (அஅ)

(கவி - அகூ. அ - கை.)

சீவனுககு மூன்றுபாதியும் - எட்டததியாசமும் - ஐந்தவத்தையுங கூறு வான்வேணடி, யிக்கவியில் மூன்றுபாதிகளி னுமங்களும் - அவற்றி லொன்றி னிலக்கணமு முணாத்துகின்றது.

தீவிரமந் தக்களுயிர் காட்சியுற்ற பின்னும்
இகழ்முத்தி பெறற்பொருட்டு விடுவனவென் றறிக
பூரவமுற மலிச்சின்னே பாதியதி விம்போ
பாதியுமித்தியா சேர்பாதி யெனவே,

மேவுமுபா திகளொருமூன் றுளவவற்றை முறையே
  விளம்பியிடிற் சுழுத்தியுரு வாமவித்தை தானே
யாவரண வவிச்சின்னோ பாதியாம் பிரத்தி
  கான்மாவிற் கதனதுகா ரியமாம்புத் தியினில்.

[பொழிப்புரை.]

தீவிரமந் தங்களுயிர் காட்சியுற்ற பின்னுந் திகழ்முத்தி பெறற்பொருட்டு விடுவனவென் றறிக" எ - து. தீவிரமும் - மந்தமுமாகிய விவ்விரண்டையு மாத்மதெரிசனம் வாய்த்தபின்னும் விளங்காநின்ற வைக்யமுத்தியடைதற்கு விடத்தகுவனவாமென் றறிதி. "பாவமுறு மவிச்சின்னோ பாதிபதி விம்போ பாதியுட னத்தியா சோபாதி யெனவே மேவுமுபா திகளொருமூன் றுள" எ - து. பாவித்தற்கியைந்த - அவிசசின்னோபாதி - பதிவிம்போபாதி-அத்தியாசோபாதி - என்றேற்றற்கியைந்த வுபாதிகள் மூன்றுள்ளனவாம "அவற்றைமுறையே விளம்பியிடிற சுழுத்தியுரு வாமவித்தை தானே யாவரண வவிசசின்னோ பாதியாம் பிரத்தி கான்மாவிற் கதனது காரியமாம் புத்தியினில்" எ - து அவற்றைக் கிரமமாகச் சொல்லுமிடத்துச சுழுத்திவடிவமாகின்றுள்ள வவித்தையே யாவரணமெனப்படு மவிசசின்னோபாதியாம். பிரத்தியகாத்மாவிற் கதனது காரியமாகின்றுள்ள புத்தியின்கண். எ - று. தான் - ஏ - அசைகள

அவிச்சின்ன - உபாதி - அவிச்சின்னோ பாதியெனவும், பதிவிம்ப - உபாதி - பதிவிம்போ பாதியெனவும், அத்தியாச உபாதி - அத்தியாசோபாதி யெனவும், நிலைமொழியீறறு அகரமும் - வருமொழிமுதலி னுகரமுங்கெட்டுக் கமலபத்திரோதகம்போல - ஓகாரமாதல், வடநூல்விதிப்படி குணசந்தியாமென்க.

வினா - ஞானப்பியாசத்துக்குமுன் அசாத்திரப்பிரபஞ்சமும், ஆத்மதெரிசனத்திற்குப்பின் - சாத்திரப்பிரபஞ்சமும், முத்தியின்க ணிவ்வுபயப்பிரபஞ்சமும் விடுமென்றதில் ஞானப்பியாசத்திற்குமுன்னே யசாத்திரப்பிரபஞ்சத்தை விடவேண்டுமென்ற ததுபகையாதலின் விடத்தக்கதுதான். ஆத்மதரிசனத்திற்குப்பின் சாத்திரப்பிரபஞ்சத்தின் லட்சியார்த்தம் வெளிப்படுதலி னதன்வாச்சியார்த்தந் தானே விடத்தக்கதுதான். இவ்வுபயமு முத்திபெறற்பொருட்டு விடவேண்டுமாயின், ஆத்மதரிசனம்வேறு முத்திவேறோ?

விடை - ஆத்மதரிசனஞ் சீவன்முத்தியெனவும், விதேகமுத்தியென்பது - [illegible] முத்தியே [illegible]யா மெனவுங் கொள்க.

(கவி - ௬௦. அ - கை.)

ஏனைய விரண்டுபாதிகளி னிலக்கணமும்,நான்சத்தியாசங்களி னுமங்க ளு மினையவென வுணர்த்துகின்றது

பற்றியவான் மாபதிவிம் பித்திடுத ளுனே
பதிவிம்போ பாதியாம் புத்திகத மாய
முற்றுசுக துக்கங்க ளுயிர்நுகர்தல் போல
முயலுதலே யத்தியா சோபாதி யாகு
முற்றவத்தி யாசவிலக் கணமதுவே றொன்றை
யொன்றாகக் கருதலிப்பி வெள்ளியது போல
மற்றதுநால் வகைப்படுமா மித்தையுட னிதர
மற்றிதரே தரஞ்சத்தி யங்களினு லன்றே.

[பொழிப்புரை.]

பறறியவான் மாபதிவிம் பித்திடுத ளுனே பதிவிம்போ பாதியூாம்" எ-து. தங்கிய வாத்மாவானது, பிரிதிவிம்பித்தலே பிரதிவிம்போபாதியாகும் "புத்தி கதமாயமுறறுசுக துக்கஙகளுயிா நுகாதல் போல முயலுதலே யத்தியாசோ பாதியாகும்"எ-து.அந்தக்கரண சம்பந்தமாகவாய்த்த மிக்கசுகதுக்கங்களை யநுபவிக்குமாறுபோன்று,ஆத்மா விடாதுமுயறசிபபதே யத்தியாசோபாதியென்பதாம் "உற்றவத்தி யாசவிலக் கணமதுவே றொன்றை யொன்றாகக கருதலிப்பி வெள்ளியதுபோல" எ - து. இங்ஙனமெய்திய வத்தியாசவிலககணமெனல் ; கிளிஞ்சலை வெள்ளியென்க் கருதுமாறுபோன்று, ஒன்றை மற்றொன்றாகக்கருதலாம் "மற்றதுநால் வகைப்படுமா மித்தையுட னிதர மற்றிதரே தரஞ்சத்தி யஙகளினுல்" எ - து அந்தவத்தியாசமானது ; மித்தையாததியாசம் -இதராத்தியாசம்-இதரேதராத்தியாசம்-சத்தியாத்தியாசம்-எனநான்குவகைப்படும். எ-று. அன்று - ஏ-அசைகள். இப்பி வெள்ளியதுபோலெனலை - மித்தையாத்தியாச முதலிய நான்கிற்குங்கொள்க

சுழுத்தியவத்தையிற் பிராக்ஞனுக்கக் கட்டுண் டிருத்தலி னுபாணுவிச்சின்னோபாதியெனவும், அந்தக்கரணப் பிரதிப்லனுகிக் கனவிற் றைஜசனுவவைதப்பார்த் திருத்தலின் பிரதிவிம்போபாதியெனவும், மனோகற்பிதத்தாலுண்டான துக்கரூபமான விடயங்களைச் சுகம்போலக்கருதி நனவின்கண்ணடைதற்கு விசுவனுகமுயலுதலி னத்தியாசோபாதியெனவும், ஆத்மாவிற் கலாந்தமாக வந்ததுபோலத் தோற்றினவெனக. (௬௦)

(கவி - ௩௧. அ - கை.)

மூற்கூறிய வத்தியாசவிலக்கணமினையவென வுணர்த்துகின்றது

நெருப்பினொடு புணர்ச்சியாற் புனற்கழற்சி வரல்போ
னித்தமுறு மான்மசந் நிதியதனின் முறையே
சரிப்பினொடு காண்டனினை வுறலறிதல் வரலாற்
றருந்தூல மெய்மித்தி யாத்தியா சந்தா
னிரிப்பருமிந் திரியங்களே யிதராத்தி யாச
மிதரேத ராத்தியா சங்கரண மாகும்
தரிப்பரிய மூலவகங் காரமது தானே
சத்தியாத் தியாசமெனச் சாற்றுவர்தக் கவரே.

[பொழிப்புரை.]

"நெருப்பினொடு புணர்சசியாற புனறகழறசி வரல்போ னித்தமுறு மான் மசந்நிதியதனின் முறையே சரிபபினொடு காணடனினை வுறலறிதல் வரலால்" எ - து. அக்கினிசம்பந்தத்தாற சலத்துக குட்டணத்தன்மை வருமாறெங்ஙன மோ - அதுபோலச், சதோதயமாகவிளங்கு மான்மசந்நிதியில் முறையே-போக்குவரத்தும் - காணுதலும் - நினைத்தலும் - அறிதலும் - வருதலினால் "தருந்தூல மெயமித்தி யாத்தியா சந்தா னிரிப்பருமிந தியஙகளே யி தராத்தியாச மி தரேத ராத்தியா சங்கரண மாகும்" எ - து. தக்கதூலசரீரமே - மித்தியாத்தியாசமாமெனவும், நீககற்கரிய விருவகை யிந்திரியஙகளே - இதராதத்தியாசமா மெனவும், அந்தக்கரணங்களே - இதரேதராதத்தியாசமாமெனவும். "தரிப்பரிய மூலவகங் காரமது தானே சத்தியாத்தி யாசமெனச சாறறுவா தககவா." எ - து. நிலைத்தற்கரிய மூலவகங்காரமே - சத்தியாத்தியாசமாமெனவுஞ் சத்துக்கள் கூறாநிற்பர். எ - று. ஏ - அசை இக்கவி - நோநிரனிறையணி. தூலமுதலியநான்கின்சேட்டைகளை - ஒவ்வொன்றாகத் தெரிவித்ததேனு மவ்வவற்றிற்குரிய பலவற்றையுங்கொள்க.

பஞ்ச-அங்கம்-பஞ்சாங்கமெனவந்ததுபோல, மித்திய அத்தியாசம்-மித்தியாத்தியாசமெனவும், இதர - அத்தியாசம் - இதராத்தியாசமெனவும், சத்திய - அத்தியாசம் - சத்தியாத்தியாசமெனவும் வந்தது தீர்க்கசந்தியும். தேவ இந்திரன் - தேவேந்திரனென்றாற்போல, இதர - இதரமென்பது - நிலைமொழியீற்று - அகரமும் - வருமொழிமுதலின் - இகரமுங்கெட்டு -ஏகாரநதோன்றி இதரேதரமென வந்தது குணசந்தியுமாமென்க. முறையே யென்றமையிற் போக்கு - வரவுகளுக்கும், காண்ட-லிந்திரியங்களுக்கும், நினைத்த-லந்தக்கா

ணங்களுக்கும், அறிதல்-மூலவகங்காரத்திற்கு மெனக்கொள்க. கூடத்தன தாசந்நிதியை யடுத்திருத்தலா லகங்காரமுதலிய நான்கிற்கு மித்தொழில்க ளுண்டாயினவென்க. எனவே, யிவைகட் கோரறிவு தனியேயின்றென்பது பெற்றாம்.

(பதசாரம்.)

நித்தியமானவாத்மா வனித்தியமானதேகசம்பந்தமாய் அதன் சரித்தலாதியின் றொழிலைத் தனதாகப்பாவித்தலின் மித்தியாத்தியாசமெனவும், தனக்கு வேறாய விந்திரியங்களின் றொழிலைத் தனதாகக்காண்டலி னிதராத்தியாசமெனவும், மனமாதியவற்றை யானெனதெனச் சங்கற்பிக்குஞ் சங்கறபத்தைத் தனதாகப்பாவித்தலி னிதரேதராத்தியாசமெனவும், தானல்லாததைத் தானாகக் கருது முகங்காரத்தைத தானாகவறிதலின் சத்தியாத்தியாசமெனவுங் கூறினர்.

அத்தியாசோபாதியி லுண்டான நான்கத்தியாசத்தி னிலக்கணமுணர்த்தியதென்க (கக)

(கவி - கூஉ. அ - ௯க.)

அகங்காரத்மாவிற் குள்ள வேனைய நான்கில் மூன்றத்தியாசங்களி னிலககணமினையவென வுணர்த்துகின்றது-

ஆங்காரான் மாவிற்கு நானெனலாம் கயிற்றி
னரவமென நிருபாதி காத்தியா சந்தா
ஞங்கார வியலான்மா விற்குநான் கருத்தா
வாமெனலாம் சிவப்புவலம் போற்சோபா திகமா
மீங்காகுங் கரணதரு மான்மாவிற் கிச்சா
மியநானென் றிருத்தலினு லலைபுனலிற் புக்க
வீர்ங்கதிரின் விம்பமெனத் தத்தருமாத் தியாச
மெனவுரைப்பர் நான்குமெம்ப வானெனைநிற் கையினல்.

[பொழிப்புரை.]

"ஆங்காரான் மாவிற்கு நானெனலாம் கயிற்றி னரவமென நிருபாதி காத்தியா சந்தான்" எ - து. அகங்காரான்மாவிற்கு நானென்னுந் தன்மைவருவதில் ரச்சுசர்ப்பம்போல நிருபாதிகாத்தியாச மெனப்படுவதாம். "ஆங்கார வியலான்மா விற்குநான் கருத்தாவா மெனலாஞ் சிவப்புவலம்போற் சோபாதிகமாம்" எ - து. படிகத்திற்பற்றிய சிவப்புப்போல, அகங்காரத்தை யியல்பாகவுடை

